மார்கழி மாதம், காலை இளங்குளிர், புள்ளினங்கள் எங்கும் "கீசு கீசென்று" ரம்யமாக கூவும் நேரம். "மாதங்களில் நான் மார்கழியாக இருக்கின்றேன்" என்று பகவான் கிருஷ்ணன் சொல்லியிருக்கின்றார். அப்படிப்பட்ட அற்புதமான மார்கழி மாதத்தில், தமிழகத்தில் விடிகாலையில் வீடுகளின் வாசல்களில் அழகான, பெரிய கோலங்கள் வரைந்து, கிருஷ்ணனுக்கும் ஆண்டாளுக்கும் சமர்ப்பித்து வழிபடுவது வழக்கம். 2021 - 2022 மார்கழி மாதம் முதல் நான் திருப்பாவையை முன் வைத்து என் வீட்டு வாசலில் கோலங்கள் வரைய தொடங்கினேன். கூடுமானவரை அன்றைய திருப்பாவை பாசுரத்திற்கு ஏற்ப (ஆருத்ரா, ஹனுமத் ஜெயந்தி தவிர) கோலங்களை சித்தரித்து பெரியாழ்வார் ஆண்டாளில் துவங்கி கிருஷ்ணன் பரந்தாமன் பசுக்கள் கோவில் என்று வரைந்தேன். இவற்றிற்கு நல்ல வரவேற்பு இருந்ததால் தொடர்ந்து 30 நாட்களும் வண்ண வண்ணக் கோலங்களால் கோதையையும் பரந்தாமனையும், "ஓங்கி உலகளந்த உத்தமனையும்" கோலங்களாக வரைந்தேன். இவை தவிர, நவராத்திரியின் ஒன்பது நாட்களிலும் லட்சுமியையும், சரஸ்வதியையும், துர்க்கையையும் கோலமிட்டு வண்ணங்களால் மெருகூட்டி மகிழ்ந்து, மகிழ்வித்தேன். மற்ற பண்டிகை நாட்களிலும் தேசிய முக்கியம் வாய்ந்த நாட்களிலும் கோலங்கள் வரைந்து பல வித நிறங்களை வாரித் தெளித்தேன். ஒவ்வொவொரு நாளும் சுமார் நான்கு மணி நேரம் கொண்டு வரையப்பட்ட இந்த கோலங்கள் இணையதளம் மூலம் அனுப்பப்பட்ட போது, உலகெங்கிருந்தும் பாராட்டுக்கள் குவிந்தன. எனவே, இந்த தெய்வீக கோலங்களை புத்தகமாக வெளியிட்டுள்ளோம். பாராட்டுகள் தெரிவித்த அனைவருக்கும் நன்றி. இந்த முப்பது நாள் யாகம் மூன்று வருடங்களாக வெற்றிகரமாக முடிந்ததற்கு காரணம் "உந்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" என்னும் தெய்வ சங்கல்பமே ஆகும். கண்ணனுக்கும், கோதைக்கும் அரங்கனுக்கும் ஆண்டாளுக்கும் மீண்டும் ஒரு முறை சமர்ப்பணம்.

சென்னை
29.01.2024

கமலா பார்த்தசாரதி



# 1. மார்கழித் திங்கள்

*மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்!
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர் மதியம் போல்முகத்தான்
நாராயணனே நமக்கே பறை தருவான்
பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்





# 2. வையத்து வாழ்வீர்காள்

வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம்பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ! பாற்கடலுள்
பையத் துயின்ற பரமனடி பாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமாறெண்ணி உகந்தேலோர் எம்பாவாய்.





# 3. ஓங்கி உலகளந்த

*ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கு பெறுந்செநெல்லூடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறி வண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்க* குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்



# 4. ஆழிமழைக் கண்ணா

ஆழிமழைக் கண்ணா ஒன்று நீகை கரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம் போல்மெய் கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பனாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்



# 5. மாயனை

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்
தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித் தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோர் எம்பாவாய்





# 6. புள்ளும் சிலம்பின காண்

புள்ளும் சிலம்பின காண் புள்ளரையன் கோயில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?
பிள்ளாய் எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரி என்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்.





# 7. கீசுகீசு என்றெங்கும்

கீசுகீசு என்று எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே!
காசும் பிறப்பும் கலகலப்பக் கை பேர்த்து
வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி
கேசவனைப் பாடவும் நீகேட்டே கிடத்தியோ?
தேசமுடையாய்! திறவேலோர் எம்பாவாய்



# 8. கீழ்வானம் வெள்ளென்று

கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான் போகின்றாரைப் போகாமல்காத்து உன்னைக்
கூவுவான் வந்து நின்றோம் கோதுகலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப் பறை கொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்
ஆவாவென்று ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய்.



# 9. தூமணி மாடத்து

தூமணி மாடத்து சுற்றும் விளக்கெரியத்
தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமான் மகளே! மணிக் கதவம் தாழ்திறவாய்
மாமீர்! அவளை எழுப்பீரோ?* உன்மகள்தான்
ஊமையோ? அன்றி செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று
நாமம் பலவும் நவின்றேலோர் எம்பாவாய்

